ஓம்

ஸ்ரீ ரமணசற்குரு பரமாத்மனே நம:

# ஸ்ரீ ரமண வந்தாதி.





இது
ஆலங்கூர்
அ. நடேச முதலியாரால்
இயற்றப்பட்டது.

அனந்தபுரம்
ந. சு. வெங்கட்கிருஷ்ண அய்யர்
அவர்களால்





விழுப்புரம்
ஹநுமான் அச்சியந்திரசாலையில்
பதிப்பிக்கப்பட்டது.

ரிஜிஸ்டர்] 1927 [விலை 0—2—0.

ஓம்

ஸ்ரீ ரமணசற்குரு பரமாத்மனே நம:

# ஸ்ரீ ரமண வந்தாதி.



இது

ஆனைக்கூர்

அ. நடேச முதலியாரால்

இயற்றப்பட்டது.

அனந்தபுரம்

ந. சு. வெங்கடகிருஷ்ண அய்யர்

அவர்களால்






விழுப்புரம்

ஹநுமான் அச்சியந்திரசாலையில்

பதிப்பிக்கப்பட்டது.

ரிஜிஸ்டர்டு ] 1927 [ விலை 0—2—0.

உ

ஓம்

ஸ்ரீ ரமண சற்குரு திருவடி துணை.

# ஸ்ரீ ரமண வந்தாதி

## முகவுரை.

"பூவுலகில் அதர்மமும் அஞ்ஞானமும் தலைதூக்கும்போதெல்லாம் சத்திய பரிபாலனத்தின் பொருட்டுத் தவறாமல் அவதரிக்கிறேன்" என்றருளிய சாக்ஷாத் ஸ்ரீக்ருஷ்ணபரமாத்மாவின் அருண்மொழிக்கேற்ப இதுகாறுந் தோன்றிய மஹா புருஷர்களில் தற்போது அருணையம்பதியில் ஞானகாரமாய்த் திகழும் ஸ்ரீ ரமணபரமாத்மாவும் ஒருவராம். இம் மூர்த்தியின் எதார்த்த அவதார மஹிமையினைக் கூறப்புகுவது சாத்தியமன்றென்பதோடு சக்தனுமல்லேன்.

"தமையுணர்ந்தோர் பாமாலைக்கே நீதான் பக்ஷம்" என்றதாயுமானர் சத்தியவாக்கியப்படி மஹாத்மாவின் தண்ணருளுக்குப் பாத்திரமானதின் பலனாய் ஓதாதுணர்ந்து சூட்டும் இப்பாமாலையின் மாண்பினைக்கூறுவதுங் கூடாவாம்.

மஹர்ஷியின் வாயிலாயறிந்த பன்னீதிகள் வடிவாவே இந்நூல் அமைந்திருப்பதான் பக்தர் யாவர்க்கும் இது பெரும் பயனளிப்பது திண்ணமென்றதுணிவே இதைப் பிரசுரப்படுத்த அடியேனைத் தூண்டிற்று.

இங்ஙனம்,
இரமணபக்தன்
ந. சு. வெங்கடகிருஷ்ணன்.

அனந்தபுரம்,
20—3—1927.

ஓம்.

ஸ்ரீ சற்குரு பாதந்துணை.

# ஸ்ரீ ரமண வந்தாதி.



## கடவுள் வணக்கம்.

நேரிசை வெண்பா.

உலகெலா மாக்கியினி தோம்பியுமொ டுக்கி
அலகிலா ஆருயிரும் ஆகி—மலமிலாத்
தட்பாவே மன்னுந் துரியநிறை வாழ்வினையாம்
தப்பாமற் கொள்வோநெஞ் சத்து.

## நூல்.

நேரிசை வெண்பா.

அத்துவித வாழ்வை "அருணை"யென வுள்ளுவர்க்கு
வித்தகந் தந்துள் விளக்கியே—சித்திதரும்
பொன் அருணை மேவிஒளிர் போதரம ணன்புகழைப்
பன்னவரு மேதவப் பண்பு. 1

"அருணை"யென ஓர்முறை நினைத்த மாத்திரத்தே முத்தியுண்டா மென ஸ்ரீ சங்கராசார்ய சுவாமிகள் திருவாய் மலர்ந்தருளியுள்ளார். வித்தகம் - ஆத்மஞானம்.

பண்ணார் மறைமுடிவாய் பற்றற்றார் உள்ளமதாய்
எண்ணார் மலமூன்றும் இல்லதாய்—தண்ணார்
திருவருளா மன்னித் திகழ்ரமண னந்தன்
ஒருவருள்பெற் றார்க்குண் டுணர்வு. 2

மலம் மூன்று - ஆணவம், மாயை, காமியம். உணர்வு - தெளிவு.

உணவீட்டி மெய்யோம்பும் ஓர்தொழிலே பற்றிப்
பிணவீட்டி னண்ணுமனப் பேயே—பிணவு

பணவைகரி மண்ணெரிக்காம் பாழுடற்பற் றற்றே
குணரமணற் போற்றலென்று கூறு. 3

ஈட்டல் - தேடல். ஓம்பல் - போஷித்தல். பிணவு-நாய். பணவை-கழுகு. எரி - அழல்.

கூறுமதி செஞ்சடைநீர் கும்பியுரி காடுபொடி
சீறுமதி நஞ்சரவர் சோணியாய்— வீறுபதி
*சோணேசர் தற்புகழுந் தூயரம ணரியனற்
றூணேசர்க் குண்டோ சனிப்பு. 4

கூறமதி - பிறைச்சந்திரன். கும்பியுரி-யானைத்தோல், காடுபொடி-சுடலைச்சாம்பல். *ஸ்ரீ ரமண மகரிஷிகள் அருணசலேசுவரர் தோத்திர ரூபமான "அட்சரமணமாலை" என்னும் அரிய கிரந்தமொன்றருளி யுள்ளார்.

[1] சனியூரன் வென்ற[2] வலான் [3] சன்மார்க்கம் மெச்சி
நனிகூர்ந்தன் போர்சகள நண்ணும்—பனிகூர்
அருள்முருக னங்கிசமாய் அண்ணு மலைவாழ்
தெருள்ரமணன் றூட்பேணல் சீர். 5

1. வில்லிபுத்தூராழ்வார். 2. அருணகிரிநாதர். (தோல்வியடைந்த புலவர்தம் செவிகளைச் சற்று மிரக்கமின்றித் தூண்டிப்போனும், முதலில் தன்னைக் கேவலமாய் நினைத்தோனுமான வில்லிபுத்தூராழ்வாரை ப்ரபுடதேவ மஹாராஜன் முன்னிலையில் தன் அருள்வல்லமையால் அருணகிரிநாதர் தோல்வியுறச் செய்ததுமன்றி இனி "காதறுத்தல் முதலிய துஷ்டக்ருத்தியங்கள் புரியாதிருக்குமாறும் அறிவுறுத்தினர்.) 3 பொருமையே வடிவான சம்பந்தாண்டானுடைய துன்மார்க்கத்தினல் அன்னவனின் உபாசனு தேவியான மஹேஸ்வரியார் அவனுடைய வேண்டுகோளின்படி வெளிப்படாதிருக்க, ஸ்ரீ முருகபெருமான் அருணகிரிநாதரது சன்மார்க்கல்கட்கிரங்கி ப்ரபுடதேவ மஹாராஜா முதலானோர் காணுமாறு "ஸ்ரீஅருணையம்பதியில் ப்ரத்தியக்ஷமாகி அருணகிரிநாதரது உண்மைப் பக்தியை வெளிப்படுத்தினர்.

பனி - குளிர்ச்சி. அங்கிசம் - அமிசம்.

சீர்மேவு மாரணங்கள் தேடுமொரு செம்பொருளைக்
கார்மேவு மாருயிர்கள் கண்டுயச்செய்—கார்மேவும்
மாதவனை தூரமணன் மாசொன்றில் மெஞ்ஞான
ஆதவனை காடுமின்கள் ஆய்ந்து. 6

ஆரணம்-வேதம். செம்பொருள்-கடவுள். கார்-(அஞ்ஞான) இருள். கார்-அன்பு. ஆதவன்-சூரியன். ஆய்தல்-தெளிதல்.

ஆயிழையார் வண்ணகுயத் தார்வமலிந் தின்னுமின்னும்
போயிழையா தென்மடத்தைப் போக்கியவ—மேயிழையா
தென்னெஞ்ச மேல்ரமண எந்நாளும் மேவியருள்
புன்னெஞ்சர் காணாப் பொருள். 7

ஆயிழையார்—ஆராய்ந்தெடுத்த மணிகளாலான ஆபரணங்களையுடையமாதர். வண்ணகுயம் — அழகியதனம். இழைதல் — சேரல். இழைத்தல்—புரிதல்.

பொருந்துலக மும்மையிலும் பொய்யனேன் காணேன்
மருந்துபுகல் மார மணதே—இருந்துதவ
சத்திநிபா தப்பான்மை சற்றுமிலன் பாலிரங்கி
சத்தினிது வந்தளித்த தாட்கு. 8

மருந்துபுகல்—அமிர்தவசனம். மா—பெருமை. உதவ—கைம்மாறு செய்ய. சத்திநிபாதப்பான்மை—விருத்தியற்று மனமசையாதிருக்குநிலை. சத்து—உண்மை.

தாட்கொண்டு நின்கருணை தக்கமன மாத்திருப்பி
ஆட்கொண்டு போதமரு ளாயெனக்கே—மீட்கொண்டீன்
மைந்தரிடத் தன்னையொத்து வந்துதவு மாரமண
*ஐந்தவித்தார் தூயவுளத் தார்ந்து. 9

நின்கருணை (யென்னும்) தாட்கொண்டு, எனமாற்றிப் பொருள் கொள்க. தாள்—சாவி. மீன்—கருப்பம். ஈனுதல்—பெறுதல்.

* ஐம்புலனடக்கினோர்.

ஆர்க்குண்டு நம்பெருமை ஆருளமே தூரமண
னார்த்தொண்டு புண்ணியத்தா னண்ணியதால்—நேர்க்கொண்டிங்
கெந்நாளும் நந்தலைவன் எற்றகமுற் சூழ்ந்துவலம்
நன்னுளா யேத்துவோ நாம். 10

நேர்—பெருநெறி.

நாமவடி வொன்றில்லா நாதாந்த மெய்ப்பொருளை
நாமவடி வங்கொண்டு நாணுவாய்—காமவடி
வேழையேன் போற்றவைத்த எம்பிரா னேரமண
பீழையேன் துன்றுமெனைப் பின். 11

பீழை—துன்பம்.

பின்னமறும் பூரணமாய் பேசுங்காற் செம்பொருளும்
என்னகற்றி வேறா யிலகுவதோ—அன்னியத்தால்
ஏகத்து வந்தருமோ ஏந்துபுகழ் மாதவவி
தேகத் தொளிரறிவு சேர்ந்து 12.

முத்திநான்கினுள்விதேகமுத்திஒன்றும். அறிவு-ஆத்மஞானம்.

சேர்குணமொன் றில்லேற்குத் தேர்தாமுண் டோமடமூந்
தீர்குணமொன் றச்செய்வாய் தேர்ந்துதவும்—நீர்தான்
சிறுமகவின் கைம்மணிபோல் சீர்மோன வைப்பைப்
பொறுமைமம ணுகருணை பூத்து. 13.

பொறுமைமமணு, கருணைபூத்து நீர் தேர்ந்துஉதவும் சிறு மகவின்கைம்மணிபோல், சீர்மோனவைப்பை—சேர்குண மொன்றில்லேற்குத்தேர்தாமுண்டோ? மடமூந்தீர்குணம் ஒன்றச்செய்வாய்: எனமாற்றிப்பொருள்கொள்க. 13a.

பூமிசையோர் தேசிகனுய் போதித்தாய் அன்றுமைக்குத்
தாமிசையோர் தத்துவத்தை சங்கரனே—நாமிசையாள்
நாயகன்மால் விண்ணவர்கா ணுததுணை ருந்தரமோ
தீயகன்ம முள்ளேன் செறிந்து. 14.

ஆன்மகோடிகளும் பக்குவமெய்தி மெய்ஞ்ஞானத்துவாரா ப்ரஹ்ம சாக்ஷாத்காரமடைந்துய்யுமாறு பெருங்கருணைகொண்டு பரமசிவன் தன் யதார்த்தஸ்வரூபத்தின் லக்ஷணங்களையும் சகல வேதாந்தநுட்பத்தையும் விவரித்து பூர்வம் உமாமஹேஸ்வரிக்கு அருளிச்செய்தாரென்பர் அவ் வருண்மொழிகளே இன்று "தேவிகாலோத்தரம்" என்னுங் கிரந்த ரூப மாக விளங்குகின்றது. வடமொழி சுலோகங்களாக விருந்த இதனை யாவருங்கண்டு தெளியுமாறு பகவான் ஸ்ரீ ரமணமகர்ஷிகள் தற்போது தமிழ்ச் செய்யுளாக அருளியுள்ளார்.

செறியுவர் பிரித்துதவு தெண்ணீர்மே கம்போல்
நெறியுபர்வே தச்சிரந்தா னேர்ந்தாய்—பொறிமனமி
கந்ததொன்றை யோரமண கண்டுய்யு மாறுளதோ
தந்ததொன்றை விட்டுமுல்தா சற்கு 15.

இகத்தல்-கடிதல்.

சற்குணதே வோரமண சன்னிதிவிட் டேமனமாந்
துர்க்குணகு ரங்கக தொன்மாத்—திற்பொறியிற்

கால்வழிபாய்ந் தேபுலனுங் கைக்கனியு ணத்தாவும்
மேல்வழிந டத்தார்ந்து மேல் 16.

மேய குருவும் விபுசிவமும் ஒப்பெனவே
ஆய மறைகள் அறைந்தாலும்—தூயகுரு
சீரியதென் றேதுணிமின் தெய்வத்தாற் றோவொணுப்
பேரியலோர் சொல்லாற் பெறும். 17.

பெறுவா மயன்படைப்பும் பீடுறுமால் காப்பும்
உறுநாச வன்றுடைப்பு மோயும்—நறுமார்க்கம்
ஏங்கிபுலம் பிப்பிணமென் றெல்லோருங் கைவிடுமுன்
தாங்கிரம ணன்றுள் தலை. 18.

நாசவன் - இயமன்.

தலைவனைத் தூரமண சற்குருவை மாயா
மலைவனைத் தும்போக்கி வாழ்த்தாய்—அலையனைய
நான்குவழி யேழாக நண்ணுமெண்பா ஞலிலக்கந்
தோன்றுபவ நீங்குமருள் தோய்ந்து. 19.

தோயுநிறை வன்மைகுன்றிச் சோர்ந்திடுமுன் அங்கமெலாம்
ஏயுநிறை மெய்ப்போதம் எய்திடுவாய்—ஆயுமறை
உட்பொருளா மன்னும் ஒருரமணன் றுட்பானி
கட்பொருள்க ளோந்துங் கடிந்து 20.

கடிந்தியமன் றூதருனைக் கைக்கொள்வ தெண்ணுய்
படிந்துமல மாமாயைப் பௌவம்—முடிந்தசுரி
பூங்குழலார் மண்பொனசை போற்றிகுரு சேவடிநீத்
தீங்குழல்வ துள்ளமே யெற்று. 21.

பௌவம் - கடல்.

எற்றையுனக் காட்படுவ தென்றருணீ பாலிப்ப
தற்றைவரை பெற்புரப்ப தாருனலான்—மற்றைய
வெய்யனென் றென்னை விலக்கா தருள்புரிவாய்
மெய்யனே யின்னே விரைந்து. 22.

விரைந்தொர்கலன் செய்திலேன் மேலவர்கட் பில்லேன்
கரைந்தொர்கண முள்ளேனீர் கால—இரைந்தொலியம்

போதியுல குண்டோவென் போற்கடைய சென்னாசே
விதியுழல் காய்க்குமுண்டோர் வீறு. 23.

உள்ளல்-கருதல். காலல்-கசிதல். அம்போதி-உலகம்.

வீறுமிக வுற்றாலும் வேண்டிபல மூர்த்திகளின்
பேறுமிக சித்திகளைப் பெற்றாலும்—நாறுமுடல்
மேவும் பொருண்மருவு மேதகையுண் டோநமனை
வாவுகுரு நோக்கலான் மற்று. 24.

வாவல்-கடத்தல். ஞானாசிரியர் திருவனுக்கிரகத்தாலன்றி ப்ரஹ்ம சாட்சாத்காரம் பெறுதல் கூடாதென்பது சகல வேத புராண இதிகாசங்களின் துணிபு.

மற்றும் புகல்வதெவன் மாமாயை நெஞ்சகமே
சற்றும் பொருந்துகிலாய் சாட்சியாய்—பற்றொடிரு
கைகூப்பி னங்குருதாள் காணுங் கருணைமழை
ஐகூலங் கன்றினுக் கற்று. 25.

பற்று-அன்பு. ஐ-அழகு. கூலம்-பசு.

அற்றவர்தங் கோவே அருாமண எங்நெஞ்சம்
பற்றவுமுன் றாட்புகழ்வாய் பாடவும்—உற்றசிரம்
தாழவுமா சச்செவிசிர் தாரணிந்தேத் தக்கரங்கால்
சூழவும மைத்தாள் தொடர்ந்து. 26.

தொடர்விதிவன் மையொழித்துத் தூயதுரி யந்துய்த்
திடர்கெடுத்தாட்கொண்டருள்வா யெந்தாய்-கடமுடையின்
ஆவியுன்றன் பூரணத்தோ அல்லதொரு தாயகத்தோ
மேவுமச சேயருளு மே. 27.

விதிவன்மை – வலிவலி.

மேகமெனப் பெய்தருளே மெய்யடியார் தம்மோம்பி
ஏகமெனுந் தற்பாமா யிங்கிலகு—யோகரம
ணோத்தமனே ஆசையினை ஓருள்வாள் கொண்டறுக்கின்
கோத்திரைமற் றுந்தொழிலென் கூறு. 28

கோத்திரை - உலகு.

கூடவுநி னன்பர்குழாங் கும்பிட்டுக் கொண்டாடிப்
பாடவுமெ னக்காசை பாலிப்பாய்—நாடரிய

வேதாந்த நன்னாட்டை மேவியா சோச்சியொளிர்
நாதாந்த நின்மலமௌன ஞ. 29

நானுவா மாருயிரை நாட்டுவிப்ப துன்னருளே
ஆனுலு மாரறிவார் அத்தனே—வானாளும்
இந்திரனு மண்ணாசும் எவ்வளவு மொக்குமோ
தந்திரமு ணர்ந்தார் தமக்கு. 30

திரம் - நிலை.

தமக்கெனுமோர் பற்றுந் தருகுறிகு ணங்கள்
தமப்புலனு மும்மலமுஞ் சாரார்—சுமக்கும்
மலவுடலு மன்னுமன்றே மந்திரமாய் மண்மேல்
குலவுரம ஞதவக் கோ. 31

தமம் - இழிவு.

கோசமெனும் ஆபாசக் கூட்டிலொளிர் சிற்சோதி
பாசமெனும் பந்தமறுப் பார்க்கிலங்கும்—தேசவிரப்
பேரொளியோ டொன்றுய் பிறப்பொழிவ தென்றுகொலோ
பேரொளிரு மாரமணு பேசு. 32

பேசாத மோனப் பெருவெளியை நிட்டையலான்
வாசாவி ஞன்மருவல் மார்க்கமோ—ஆசான்
திருப்பதமே தோணியாய் சென்மவுவர் நீந்தி
யிருப்பதுவே நெஞ்சே யினிது. 33

உவர் - கடல்.

இனிரமணன் செந்தா ளிறைஞ்சுவதே துன்றுந்
துனியறுக்கு மாருத் துணிந்தேன்—இனியான்
எனதுனது நீயென்ப எல்லாம்பொய் நெஞ்சே
உனதுதொழி னீத்திருமென் ஞேடு. 34

துனி - துன்பம், ஆறு - மார்க்கம்.

ஓடுமொரு கோவணங்கொண் டுற்றது றவாய்வளியா
வோடுமொரு பேய்நெஞ் சொடுக்கியே—வீடுதொறுந்
தீவருத்தும் போதேற்றுத் தின்றெனையுட் டேடுதொழி
லேவிருப்ப மென்னாசே எற்கு. 35

வளி - காற்று.

எற்றோ வெனைப்பெற்ற தீரைந்து திங்கள்சுமந்
துற்றோ மொருமகவென் றுற்றதாய்—பெற்றோருங்
வாணாளிற் சற்றுமுனை வாழ்த்தாவெற் பெற்றதிவண்
வீணாகு மற்றும்வீண் வீண். 36

வீயுமண மும்பானெய் வேயுமெரி கண்ணொளிபோ
லேயுமென துண்மருவ லெண்ணாது—நீயுமாங்
கல்லாய்செம் பாயொளிர்வை கண்டவடி வாயெனவாய்ந்
தெல்லாந் திரிந்தே னிகம். 37

வீ - மலர், வேய் - மூங்கில், எரி - நெருப்பு, இகம் - பூமி.

இகபரவாழ் விற்கிதுவே சேற்றதுணை யென்றே
சகவுயிர்வாழ்த் துஞ்சோண சைலம்—சுகபானு
யோங்குமா ணனந்தவொப்பற்றான் றாண்மலரை
தாங்குமன மேநீ தலை. 38

தலைப்பட்டோம் சற்குருதாள் தாழவினி மாயா
வலைப்பட்டோர் சன்மமுற மாட்டோம்—உலைப்பட்ட
ஓரிரும்பு மேனிசம ணோத்தமனைக் குற்றநமக்
காருறழ்வு மண்விண் ணறை. 39

உறழ்வு - ஒப்பு.

அறையெனவே யாடுமன மாறிவை மேவுக்
துறையெனக்கா ருன்னையன்றிச் சொல்வார்—முறைமண
வீறுமலர்த் தாளில் விருத்திகளெ ழுமலொரு
பேறுமலர் வாயாற் பிறழ். 40.

அறை - அலை, ஆர் - அருமை, துறை - வழி, முறை - குணம், பிறழ் - சொல்.

பிறங்கரிகம் மால்வாழ்வும் பேணேனல் லார்விட்
டுறங்குகையி லும்பிறர்கட் புன்னேன்—இரங்குநர
கம்புகினு மெள்ளேன் கருணையிருக் கின்ரமண
நம்புகில னுன்னையன்றி நாடு. 41.

அரி-தேவேந்திரன், கம்-பிரமன், மால்-விட்டுணு, இறங்கல்-தாழ்தல், எள்ளல்-இகழ்தல்.

நாவுக்குங் காதொடும னத்துக்கின் பாம்ரமணத்
தேவுக்கோ ரன்புசெயின் சிற்றுயிரும்—பூவுக்கும்
கோவுக்கு மாமறைகள் கூறுபொரு ளெண்ணற்ற
யாவுக்கு மாதார மாம். 42.

தே-கடவுள், பூ-மண்ணுலகு, கோ-விண்ணுலகு, பந்தத்திற் கட்டுப்பட்டு பிறப்பிறப்பாய குறைவாழ்வையுடையதால் சிற்றுயிரென்னப்பட்டது. பந்தம் விலகுங்கால் ப்ரஹ்மமே தானாகி யாவுக்கும் ஆதார வஸ்துவாய் விளங்கும்.

ஆற்றகிலே னையவினும் ஐம்புலனு குங்கிமிரச்
சேற்றிலழுந் தாநெறியிற் சிந்தையிருள்—பாற்றிநனி
மெய்யும் விதிர்விதிர்ப்ப மெய்யன்பா லுள்ளுருகக்
கையுந் தொழச்செய்து கா. 43.

கார்மேனி யான்பிரமன் கண்டஞ்ச நின்றவனைப்
பார்மேவு நாயிற்கீழ்ப் பட்டவனேன்—சீர்மேவத்
தண்ணருளா லோர்வடிவஞ் சாற்றினனை நெஞ்சகமே
எண்ணரிய நேயம்வைத் தேத்து. 44.

ஏற்றதொரு சாதனத்தா லென்மனமுந் தன்னிலையில்
ஊற்றமுறு மாறருளும் உத்தமனே—தோற்றுயிரை
எப்படியும் வல்லவுனக் கீதருமை யோரமண
அப்படியுந் தாழ்சூழ்ந் தரசு. 45.

ஊற்றம்-அசைவின்மை, அ+படி-அவ்வுலகம், சூழ்ந்துதாழ் எனமாற்றிப் பொருள் கொள்க.

†அரவணிமால் கூப்பிடுதென் றம்மலைபொன் னீந்தே
திரவணிசேர் சோணநகர் சேர்ந்தோ—னுரமணியாய்
ஆனாத செல்வங் கொழிக்குநம தாரியர்சேர்ந்
தானா ருடற்கட் டொழி. 46.

மால்-பெருமை (சிவன்), அம்-அழகு, திரம்-முத்தி, அணி-கூட்டம், (ஜீவன் முத்தர்களான மஹான்கள் பலர் எஞ்ஞான்றும் விளங்கப்பெறும் புகழுடைய அருணை) உரம்-ஞானம், ஆனாத-குறையாத.

† சன்ம தேசமான "திருச்சுழி"யின்கண் இளம்போதில் தனக்குத் தான் ஒலித்த "அருணாசலம்" என்னுந் திருமொழியின் இரகசியார்த் தத்தை யுன்னி ஸ்ரீ அருணாஜலேசுவராாகிய "என் தந்தை அழைக்க யான் போகிறேன்" என்றதோர் திருச்சீட்டுவரைந்து அகத்தின்கண் வைத்து பகவான் ஸ்ரீ ரமணமகர்ஷிகள் திருவருணையம்பதியடைந்து ப்ரஹ்மச் சரியத்திலிருந்தே துயபரமஹம்ஸராய் இன்றும் விளங்குகின்றார் எனப் பொருள் கொள்க.

ஒழிவறவே சூழொளியை உம்பர்க்கு மெட்டா
தழிவறவே யும்வெளியை ஆறாய்—விழிபெருகும்
அன்பருள மாகதியில் ஆனந்தத் தேன்பெருக்கும்
இன்பகுரு தேவை இறைஞ்சு. 47.

இறையேனு மன்பருளி என்மெய் குழைய
நிறைரோம முஞ்சிலிர்ப்ப நெஞ்ச—முறநெகிழ
ஆர்கலிவிண் டன்ன அருவியிரு கண்மல்க
கூர்கலியிற் கோவேயெற் கொள். 48.

இறை-அற்பம், கலி-(அருட்செல்வ மின்மையாகிய) வறுமை.

கொய்தகடி வீதுவிக் கொண்டாடு வேனுனையுள்
வைதகடி லாதருளி வாழ்வித்தோய்—மெய்தரும்பேர்
பண்சுமந்த பாமடுத்துப் பட்சப் பரிசளிக்கும்
விண்புகழ்ந்த மாண்புறதே வே. 49.

கடி-மணம், வீ-மலர், உன்-இதயம், வை-சகம், தகடு-தோற்றம், மெய்தரும்பேர்-எதார்த்தமுணர்ந்தோர்.

வோறுக்கு முன்பதம்பேண் மேபநெறி தந்துபவச்
சூறுக்கு மாருறையாந் தூயமுதஞ்—சோரியில்
தோய்விக்க வோஇட்டம் தொன்னாகத் தோமண
எய்விக்க வோகூறிதம். 50

பவச்சூர்-பிறவிப்பிணி, உறை-மருந்து, அரி-கடல்.

இதழவிழும் பூவாய் இதயமலர் விப்பாய்
கதழ்வவிழு ஞானவென்றே கண்ணே—இகழ்விண்டோர்
சொல்லா லுணர்த்தரிய தொற்பொருளே மன்னுவோய்
எல்லா மிறந்தவிட மேய்ந்து. 51.

கதழ்வு அவிழ்தல்-பெருமைமிகல், என்று-சூரியன், இதழ்விள்ளல்-வாய்திறத்தல்.

ஏயர்கோ னன்னவயி னீர்ந்திறப்ப வல்லவனே
தூயர்கோ வேயினியும் சோதித்தல்—ஞாயமோ
தீரமில னுயினுந்தாள் சேர்க்கினுனக் கென்னிகழ்வாம்
பேரனலுக் கோமுண்டோ பேசு. 52.

ஏயர்கோன்-நாயன்மார்களறுபத்து மூவருளொருவர். இவர், தனக்குண்டான சூலநோய் ஆரூரனால் தீருமெனப் பரமசிவன் ஸ்வப்பனத்திலருளி அவ்வாறே சுந்தரனோடு பரமசிவம் தன்னகங்குறுகுவதைக்கண்டு பரவைபால் பரமசிவனைத் தூதனுப்பிய சுந்தரனால் இது தீருவதினும் உயிர் துறத்தலே மேல் என்று வாளால் வயிற்றை அறுத்துக்கொண்டு உயிர்துறந்த வைராக்கிய பத்தர்.

பேசற் கியலாப் பேறிவாய் பத்திசெயும்
தாசர்க்கோர் புக்கிடமாய் சார்ந்தாமனேசர்த்தாள்
சிந்திக்கு நாட்களெலாம் தென்றிசைக்கோன் பாசத்தால்
பந்திக்கா நாளாப் பகர். 53.

தென்றிசைக்கோன்-இயமன், பந்தித்தல்-கட்டுதல்.

பகலிரவு தோற்றப் படாநிட்டை கூடிப்
பகலிரவி லாநிலைவாழ் பண்பே— அகவிருணீக்

கோளுற்ற பானுமக ணுத்தமனே பேரின்ப
நீளுற்றே வாழ்கவுண் ணீடு. 54.

நீடாழி சூழுலகில் நேர்ந்தவுயி ரத்தனைக்கும்
வாடாமு கத்தனையா மன்னுவோய்—பீடார்மண்
பாவியென்றோ என்னொருவன் பாழ்க்தமனந் தோற்றுது.
மேவியெங்கோ நீயொளித்தாய் மீள். 55.

மீண்டுயுமா றென்றுளதோ வெம்பந்தச் சிக்கத்தின்
வேண்டுவவெ லாம்விட்ட வெய்யவனேன்—ஈண்டுபுகழ்
அண்ணு மலையுறையும் அண்ணலே மாசமண
தண்ணு ரருள்வடிவே சாற்று. 56.

சாற்றுமொரு மூவுலகுந் தங்கிமுடிந் தேமுளைக்கும்
ஊற்றபொருள் தன்னகமா யோர்ந்துதனித்-தேற்றமுறும்
ஆரணங்க ளோதுபுகழ் அண்ணு மலையுறையெங்
காரணனைக் காண்பனவே கண். 57.

கண்ணுய் மணியாய் கருத்தாய் விருத்திகளாய்
விண்ணுய் நிலனுய் விபுத்துவமாய்—பண்ணுர்
நிகமமுடி வாயொளிரும் நித்தியமே தோன்றி
இகமெமையாட் கொண்டதுளத் தேய்ந்து. 58.

ஏயு முணர்வுருவே ஈசனிலை யென்றின்பந்
தோயு மொருபொருளே தூயகுரு—வாயுலகில்
வந்தருளும் மாசமண வள்ளலே நாவுறநிற்
றந்தருள்வ துன்னருளால் தான். 59.

தந்தருளல்-துதித்தல்.

தானுக வந்தொருசொல் தந்தருளும் நாயகனை
நானுக வேகண்ட நான்பத்தி—மானுக [தால்
எக்குருவைப் போற்றிசெய்வேன் என்னையன்றி வேறில
மிக்குறுமா நந்தநிலை விட்டு. 60.

விட்டொன்றைப் பற்றும் விருத்தியெழு மூலவருள்
சுட்டொன்றை வைத்தாயின் தோன்றுமோ-தொட்டென்
ஆரியனை நன்கேத்தி ஆரிதய காட்டமதாய் [றும்
சீரியவ திற்றேய்தல் சீர். 61

தொடல்-சார்தல்.

சீற்றமறுத் துக்காமச் சிக்கறுத்து வெய்யமனந்
தோற்றும் பகையைத் தொலைத்திதயத்—தேற்றமடைந்
தத்துவித முத்திநிலை யார்ந்தரம ணற்போற்றி
சித்துருவாய் நெஞ்சே திகழ். 62.

திக்கா வெழுந்தருணை தெள்ளமுத முண் பித்தான்
முக்கா லமுமுணரு முன்னவன்றன்—சொக்காருங்
காகநரி நாய்கழுகு காதலுட னுண்டுகக்குந்
தேகநா னென்றிருந் தேற்கு. 63.

திக்கு-ஆதரவு, சொக்கு-அழகு.

தேக நழுவுமுனம் தேர்ந்துணர்வா மன்னுவதற்
கேக முதவுரம ணேத்தமனை—ஆகமங்கள்
நேடி யறியாத நின்மலனை யெந்நாளும்
பாடித் தொழுவாய் பணிந்து. 64.

நேடல்-தேடல்.

பணிகொண்ட வெம்பிறையைப் பற்றுவரோ சன்மப்
பிணிகொண்ட பேதைமனப் பேயர்—துணிகொண்ட
தேவிலகுஞ் சோணைநகர் தேசிகனாய் வந்திரக்க
மேவி யருளியலை விண்டு. 65.

அருளியலைவிண்டு துணிகொண்ட தேவிலகுஞ் சோணைநகர், தேசிகனாய் வந்து இரக்கமேவி பணிகொண்ட வெம்பிறையை எனமாற்றிப் பொருள் கொள்க 'துணி-சோதி.

விண்டுமுத லோர்க்கும் விளங்காத தத்துவத்தை
† விண்டுவென வோர்பரிசும் வேண்டாதான்—பண்டுரையால்

எண்ணத்தை மாய்க்க வியலாத வெற்றகுதி
பண்ணிதெளி வித்தான் பரிந்து. 66.

† விண்டு-மேகம், பண்டுரை-தொன்றுதொட்டு வந்த அனுக்கிரக மொழி, தகுதி-பக்குவம்.

பரிபாகி யென்றே பரிபாலித் தாய்நீ
விரிவாய வேதாந்த மெய்யை—புரியாரும்
பேதைமன மந்தந்தோ பேயா யுழன்றுமல
* மாதைமணந் தாடும் மறந்து. 67.

பரிபாலித்தல்-அருளுதல், புரி-ஆசை, * அவித்தையாம்மாது.

மறவர் மருகனன்று மாபதிக்கோ துண்மை
துறவர் தமதிறைவன் சொல்லிப்—பிறவிக்கு
வித்தாகு மும்மலத்தின் வேரறுத்த ஆர்வமதின்
வித்தார மென்னே விதப்பு. 68.

மறவர்-குறவர், விதப்பு-ஆச்சரியம்.

விதவிதமாப் பேசி வினைகொழிக்கும் மக்கட்
பதசெதனைத் திக்காகப் பற்றும்—பதமுடிவி
ளுக்கிழுத்துக் கண்மறைந்து சாறுமுடல் வீழ்தருணம்
போக்குவர வற்றேய் புகல். 69.

பதமுடிவு-(ஆயுள்) காலமுடிவு.

புகாதென்றும் நல்லுரைகள் புல்லறிவோர் காதில்
தகாதென்று மோதுவதுந் தக்கார்—விகாதமிகும்
என்றுபயந் தோஇறைவ என்னனையார்க் குண்மைநெறி
ஒன்றுமியம் பாதிருப்ப தோது. 70.

ஓதி யுணர்ந்தடங்கென் றேதுமுனோர் சொற்கிலக்காய்
ஓதி யுணர்ந்தடக்கும் உத்தமனுந்—தீதில்சம
ஞானந்த தேசிகனை அண்மியவ னுறுகொளார்
தானந்த மெய்துவரோ தான். 71.

தான்செய்தும் முத்தொழிலைச் சற்றுமசை யாதுதிகழ்
வான்செய்ய ரூபமரு மங்காண—நான்செய்யு
நன்னோன்பு முன்னருளி னாட்டமின்றி முற்றுறுமோ
முன்னோனே பாரென் முகம். 72.

முகக்கண்ணி னானோக்கி முற்படுமெய் யன்பர்
அகக்கண் ணிருணீக்கும் ஆன்றோய்—சகக்கண்ணோர்
பாமரன்போற் றோன்றும் பரமவுன்ற னுண்மையினைத்
தாமறிவ ரன்றோ தகை. 73.

† தகவா மனத்தைத் தனியிருந்து நோக்கின்
* தகவா விளங்குமெனச் சாற்றும்—சகவாய்
ஒருஞான தேசிகனா யோங்குரம ணக்கோன்
திருஞான தீக்கையினைத் தேர். 74.

† தகவு-தெளிவு. * தகவு-அறிவு.

தேர்தற் கரிய சிவயோக மன்மமுணார்ந்
தார்தற் கரிய அகநிலையிற்—சேர்பவர்க்கே
கன்மத் திரளொழியுங் கால னிடர்தீருஞ்
சன்மமறு மென்றான் தலை. 75.

தலைமிசையம் பாதத்தைத் தாக்கியருள் கூர்ந்தென்
நிலை † மிசையீ தென்றுணர்த்தி நின்றான்—தொலையிலனா
யெப்பொருட்குங் காரணனா யேயொருவன் மண்ணுதித்து
முப்பொருளுந் தான்வாங்கி முன். 76.

† மிசை-உணர்வு, தொலை-ஒப்பு, முப்பொருள்-உடல், பொருள், ஆவி.

முன்னரிய சஞ்சிதஞ்சேர் மூட்டையெலாந் தானெரித்திங்
கென்னரிய போதநல னெற்கீந்தோன்—பன்னரிய
தண்ணருளின் பான்மையினைச் சாற்றிடவு மெற்கெளிதோ
நண்ணிமிகச் சொல்வே னயந்து. 77

முன்னல்-நினைத்தல், சொல்லல்-துதித்தல்.

நயனத்தின் வாரிகண்ட நல்லடியார் சங்கம்
சயனத்தி னுஞ்சூழ்ந்து தாழ்வேன்—அயனத்தின்
மூலமறுத் தானருளை முன்னியன்பால் நெக்குவிதி
சாலமரு வாதுள் தனித்து. 78

அயனம்-பிறப்பு, விதிசாலம்-பிரம்மசிருட்டியாகும் பிரபஞ்சத்தோற்றமாகிய மாயாவித்தை, (விதி-பிரமன்).

தனிநெஞ்ச நின்றவிடந் தாயகமத் தாயும்
நனிநைந்த வெற்றிடமே நாதன்—துனிநைந்து
தன்னியனு வாயென்ற சற்குருவைப் போற்றகமே
அன்னியமி லாவெளியி லாழ்ந்து. 79

நாதன்-தந்தை.

ஆழு மவித்தை யறவொழித்துத் துன்றும்
ஊழு மறவொளிர்வா னுண்டாள்—சூழும்
துறவோரே மன்னுந் துரியவிப னுட்டில்
அறவோர்தம் வேந்தனு யார்ந்து. 80

ஆர்சொல்லி யாட்கொண்டாய் அம்புவியிற் றேடியுன்றன்
பேர்சொல்லி வந்தடைந்த பேயேனைச்—சீர்சொல்லி
வாழ்த்துவதும் வீடருளி வன்னரகின் வாயரசே
வீழ்த்துவது முன்பார மே. 81

மேலாய மார்க்கம் விதவிதமாக் கேட்டிருந்தும்
வாலாய சாதனத்து மன்னுகிலேன்—சேலாருங்
கண்ணியரை மெய்ஞ்ஞானக் கட்டழகி யோடாசே
எண்ணுமென்போற் பேதையுண்டோ இங்கு. 82

1. இங்கிதத்திற் கெட்டா வியலருளை யுன்னியுன்னி
2. இங்கிதத்திற் சூண்மருவு மீசனையே—சங்கையறப்
பார்த்ததுவா நிற்பர் பதம்பாவு மூவுலகும்
3. தீர்த்தனடி சான்றுத் தெளி. 83

1. இங்கிதம்-குறி: 2. இங்கிதம்-கருத்து: 3 தீர்த்தன்-தற்போதுப்ரத்யக்ஷமாய் விளங்கும் ஸ்ரீரமண சற்குரு.

தெளித்துமலர் சேவடியைச் சேவித்துங் கண்ணீர்
துளித்துருகி வாழ்த்தல் செயுந் தூயோர்க்—களிக்குமறை
யோங்குபுகழ்ச் சோணை யுறுரமண னுள்ளிருளும்
நீங்குநெறி யுட்குள்ளா நின்று. 84

நின்ற நிலையே நிலையென்றாய் அந்நிலையும்
நின்ற னருளின்றி நேருமோ—சென்றோர்
கணமும் பலகோடி காதந்திரும்பும்
மனமும் செயல்கள் மறந்து. 85

மறவே னுறக்கத்து மாண்புறுமு னுமர்
துறவே னுளமுன் சொரூபம்—திறமேவும்
என்னரசே நின்னருளும் என்னகமே மன்னிடுமேல்
பன்னரிய மூன்றும் பகைத்து. 86.

மூன்று - மும்மலங்கள்.

பகைசேர் மனமதனைப் பற்றியே நல்லோர்
தகைசேர் பெருநெறியிற் சார்ந்து—தொகைசேர்
* அறுமதமும் போக்கி அறிவாகு மென்றான்
† அறுமதமும் போற்றுமிறை அன்று. 87.

* காமக்ரோதாதியுட்பகையாறு.

† அறுவகைச் சமயபேதங்கள்.

அன்றென்று மாமென்றும் அங்கென்று மிங்கென்றும்
நன்றென்றுந் தீதா நவிலரிதா—நின்றொன்று
யெவ்வுயிருந் தானா யிருந்தொளிர்வ தேததுவா
யொவ்வுரம ணற்குண்டோ வொப்பு. 88.

ஒப்பனையா வோதி யுணர்வித்தா னீராழ்ந்த
உப்புருவந் தானழிந்த உண்மையினை—உப்பனைய
சீவனீ ராந்தலைவற் றேடுங்கால் தன்னுருப்போய்
மேவுமறி வாகும் விதம். 89.

ஒப்பனை-உதாரணம். கடலாழங்காணச்சென்ற உப்பு உருவமான து தன் உருவமிழந்து தானுமற்று ஜலமயமே யாவதுபோன்று பரமான்ம ஸ்வரூபத்தைக் காணப்புகும் ஜீவான்மாவும் முடிவில் துாவதமற்று அப் பரமான்மாவோடு ஐக்கியமாகுமெனப் பொருள்கொள்க.

விதமொன்று லன்றொருவன் வெய்யவினைற் கோதும்
பதமொன்றை யெம்மோர்! பகர்வேன்—இதமாக
முன்னிலையொன் றில்லாது மூதருளே தாரகமாத்
தன்னிலையு ணர்ந்தேய்தல் தான். 90.

விதம்-வகை (ஜீவன், முக்தியடைதற்கான மார்க்கம்).

தானென்னு மொன்றிற் றலைசேர்ந்த வெம்மனமும்
நானென்று மற்றும் நவின்றெழுமோ—தானென்னும்
அம்முதலே மெய்ஞ்ஞான ஆரியனாய் நானென்னும்
இம்முதலைக் கொள்ளவந்த திங்கு. 91.

நான்-ஜீவாத்மா, தான்-பரமாத்மா.

இங்கேதும் பேச இடமுண்டோ சற்குருசொல்
சங்கேதத் தாடாது தானேயின்—பொங்கிமிக
வாய்ஞானம் பேசும் மடமனமே சீசீசீ
பேய்ஞான மேயுன் பிதற்று. 92.

சங்கேதம்-குறி.

பிதாமக னீன்றோய்ந்தான் பெம்மான்காத் தோய்ந்தான்
பிதா துடைத் தோய்ந்தான் பெரிதும்—ததாவே
யானும் பிறந்தோய்ந்தேன் என்றுயும் பெற்றோய்ந்தாள்
கோனுனையின் றண்டினேன் கூர். 93.

பிதாமகன்-பிரமன், பெம்மான்-விட்டுணு, பிதா-உருத்திரன்,
ததாவே-அப்படியே.

கூற்றைக் கடந்துனக்குக் குற்றேவல் செய்யுமொரு
பேற்றைக் கொடுத்தருளும் பெம்மானே—காற்றையே
ஆதாரமாக் கொண்டவுடல் அற்றுர்யிப்பு வீழுமுனம்
தீதறயா னேதல் தெரிந்து. 94.

தெரிதாவே நான்மறையுட் சித்தாந்த மெல்லாம்
விரிதாவே போதிந்தான் வேந்தன்—புரிதருபுன்
புத்தியது வெங்காமப் போக்கிலே விட்டதந்தோ
மற்றதற்கென் சொல்வேன் மதி. 95.

புரி - ஆசை.

மதியேன் விசும்பாசும் மாண்பொன்றும் வேண்டேன்
றுதியேன் பிறதே துவாந்தம்—மிதியேனல்
நண்ணரிய முத்திவெனும் நாடேயு மாமன்னன்
தண்ணருளு வந்தீந்த தால். 96.

விசும்பு-தேவலோகம், தே-தெய்வம், துவாந்தம்-நரகம்.

தாகமுடன் தன்னுருவைத் தான்காண வேண்டுமென
வேகமுட னேமனமு மேவுங்கால்—ஊகமுடன்
அன்னியத்தை யொவ்வொன்றாய் ஆராயின் எஞ்சுவது
தன்னியலென் றேனுை தன். 97.

தன்னகத்தே பேரின்பந் தக்கபல சித்தியொடு
துன்னுபெருஞ் சோதித் துலக்குடையான்—மன்னியசீர்
பொன்னருணை மேவிப் பொலிரமண னெற்கொண்டான்
இன்னருள ளித்தாளு மின்று 98.

இன்றைக்கோ நாளைக்கோ என்றலையிற் றீட்டியமற்
றென்றைக்கோ னும்வீழு மிவ்வுடல்தா—னன்றைக்கென்
அத்தனே உன்னைநினைந் தண்டுவது சாத்தியமோ
நத்தினேன் இன்னே நவின்று. 99.

நவிரத்து ணுக்கொண்டு நல்குமுமை தந்த
துவிதத்திற் பின்கூறாய் தோன்றி—புவிமுற்றும்
சாட்சியா நின்று தனியரசு செய்யுமுன்றன்
ஆட்சிக்கு முண்டோவோர் அந்து. 100.

நவிரம்-தலை, உணு-உணவு.

(பொ-ரை) உம்முடைய பசிநோயறிந்து தன் சிரமிசை யன்னந் தாங்கி வந்து இன்றும் படைப்பவளாம் ஸ்ரீ உமாமஹேஸ்வரி உவந் தளித்த இரு புத்திரருள், பின்னேனாகிய ஸ்ரீ சுப்ரமண்யக்கடவுளமிச மாகப் பூமியில் தோன்றி மன்னுயிர் யாவுக்கும் சாட்சியாக நின்று, ஒப் பற்ற முத்திநாட்டைப்பரிபாலிக்கும் ஹே! ரமணபரமாத்மனே! உமது அரசாட்சிக்கு ஓர் எல்லையும் கால அளவுமுண்டோ?

## வாழ்த்து.

நானிலமுற் றும்வாழ்க நான்மறைகள் வாழ்கவுயர்
வானிலமும் வாழ்கவெழு வான்வாழ்க—மானிடமா
வந்தெனையாட் கொண்டபெரு வள்ளலடி வாழ்கவுநான்
தந்தவிந்நூல் வாழ்க தழைத்து.

ஸ்ரீரமணார்ப்பணம்.

சுபம்.





# விளம்பரம்.

---

இந்நூலும், மற்றும் இந்நூலாசிரியராலியற்றப்பெற்ற இதர நூல்களும் வேண்டுவோர் பின் வரும் விலாசத்திற்கெழுதுக:—

(1) ஸ்ரீரமணஸ்தோத்திரமஞ்சரி
(இரண்டாம்பதிப்பு) விலை ரூ. 0—5—0

(2) ஸ்ரீ ரமணநான்மணிமாலை ,, ரூ. 0—2—0

(3) ஸ்ரீரமணவந்தாதி ,, ரூ. 0—2—0

விலாசம்:—

ஸ்ரீரமணீயவாணி புத்தகாலயம்
திருவண்ணாமலை.

ஷை புத்தகாலயத்தில் மேற்கண்ட புத்தகங்களைத்தவிர மஹர்ஷிகளால் அருளப்பெற்ற புத்தகங்களும் மஹர்ஷிகளை மற்றும் பல அன்பர்கள் ஸ்தோத்தரித்திருக்கும் புத்தகங்களும், பல அரிய நீதி நூல்களும் கிடைக்கும்.